கணபதி துணை.

# வைத்தியராஜசிந்தாமணி.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பொன்பூத்த மணிமகுடம் புனைந்து தஞ்சை
யுறைந்துலகைப் புரந்தளித்த
மன்பூத்த சரபோஜி மகராசன் றன்வந்திரி
மாலி ஞாலோர்
வன்பூத்த வுதவிகொடு சேர்வயித்ய
ராசசிந்தா மணி விளங்கத்
தென்பூத்த குணவாயி லுறை வெள்ளைக்
கவிற்றிருதாள் சேவிப் பாமால்.

## முத்துசாமி தீக்ஷிதர்

### கணபதிமூலராசம்.

சீந்திற்கொடியை மேல்தோல் போக்கித் தண்டுகளை நறுக்கிய ரசம் வடை ௫, தேன் வடை ௧, கோமூத்திர சிலாசத்து பற்பம் பணவிடை - ௨, வெள்ளைத்தாளக பற்பம்-பணவிடை - ௨, இவைகளை ஒன்றாய்ச்சேர்த்து உள்ளுக்குக்கொடுக்க விஷமேக சம்பந்த க்ஷய ரோகங்களை நிவாரணஞ் செய்யும். இச்சாபத்தியம்.

### சண்முகசெந்தூரம்.

2. பாலரசம், லிங்கம், பூரம், வீரம், தாளகம், வகைக்கு பூ ௧, ஊசிகாந்தம், சீமை அதிவிடயம் வகைக்கு பூ வ - இவைகளை மை போல் கல்வத்தில் கருவூமத்தையிலைச்சாற்றைவிட்டு நாலுசாமமரைத்து, பில்லைசெய்து ரவியிலுலர்த்தி, சட்டியில்வைத்து, மேல்சட்டி மூடி, அஞ்சுசீலைமண் வலுவாய்ச்செய்து அடுப்பிலேற்றி, தீபாக்கினியில் நாலுசாமம் எரித்திடுக. பிறகு ஆறவிட்டு எடுத்து, கற்றாழைச்சோற்றைப் பிசைந்து அந்தச் சாற்றைவிட்டு நாலுசாமம் அரைத்து பில்லைசெய்து ரவியிலுலர்த்தி முன்போலவே சட்டியில் சீலைமண்செய்து, தீபாக்கினியால் நாலுசாமம் எரித்து ஆறவிட்டு, முன் போலவே கற்றாழைச்சாறுவிட்டு அரைத்து நாலுசாமம் எரித்த செந்தூரமாகும். எடுத்துத் தூள்செய்துவைத்துக்கொள்க.
யிடை காலைமாலை அநுபானங்களில் ஆறுபொழுது கொடுக்

து சன்னிசுரங்கள் நீரும்; நாள் - உ0 - காலைமாலை அநுபானங்களில்கொள்ள மேகரணம், யோனிப்புற்று, லிங்கப்புற்று, பவுத்திரம், காசம், வாதம் எண்பதும் நீரும். பத்தியம் - காலம், சக்தி, தேசம் பார்த்துச்செய்துகொள்க. கடவுள்பேர்கொண்ட செந்தூரமாதலால் கற்றோர் பெரியோர்கள் தெரிந்து செய்வார்களென்று விரித்துச்சொல்லவில்லை.

## முத்துக்குமாரசாமிமுதலியார்

### காயசித்திலேகியம்.

3. சாதிக்காய், ஏலரிசி, வால்மிளகு, லவங்கம், அக்கிராகாரம வகைக்கு பூ - க, சீரகம் பூ - ரு, சித்திரமூலவேர்ப்பட்டைச்சூரணம் பூ - உ, அதிமதுரச்சூரணம் பூ - ரு, பறங்கிச்சக்கை பூ - க0, இச்சரக்கெல்லாம் ரவியிலுலர்த்தி யிடித்துச் சூரணித்துக்கொண்டு நெய் பூ - உ0, ஒரு சட்டியில்விட்டு மேற் சூரணம்தூவிக் கொஞ்சம் வேகவிட்டு வெள்ளைச்சக்கரை பூ - உ0, நாற்பது எலுமிச்சம்பழச்சாற்றில் கரைத்து வடிகட்டிக்கொண்டு, கொஞ்சங்கொஞ்சமாய்விட்டு லேகியபதத்தில் இறக்கி குங்குமப்பூ பூ - ஈ, கோரோசனை பூ - வ பொடிசெய்துதூவி, கிளறிவைத்துக்கொண்டு காலைமாலை கழற்சிக்காயளவு உட்கொள்க. இச்சாபத்தியம், சகலவியாதிகளும் நீரும்.

## ஞானகண்ணுபிள்ளை

### அஸ்வகந்திராசயனம்.

4. அமுக்கிராக்கிழங்கு பூ உசு, பலம், லவங்கப்பட்டை, லவங்கபத்திரி, சிறுநாகப்பூ, கொத்தமல்லி, கொடிமுந்திரிப்பழம், சந்தனம், சன்னலவங்கப்பட்டை, கர்க்கடகசிங்கி, காட்டெருமைப்பால், சுக்கு, மிளகு, திப்பிலி, வெட்டிவேர், கிராம்பு, திப்பிலிமூலம், சித்திரமூலம், செவ்வியம் இவைகளுக்கு வகை ரு. இடித்து வடிகட்டி நாலுபடிப்பால் ஒருசட்டியில் வார்த்து ருO பூ சீனிச்சர்க்கரைபோட்டு வடிகட்டிப்பக்குவஞ்செய்து கொண்டு, மேற் சூரணத்தைப்போட்டு, நெய்படி - உ, தேன்படி - க, சேர்த்து ரசாயனபக்குவமாய்ச் செய்துகொண்டு வேளைக்குக் கொட்டைப்பாக்கு அளவாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை ஒருமண்டலம் சாப்பிட்டு வந்தால் மேகசுரம், ரத்தபயித்தியம், பித்தரோகம், அஸ்தசுரம் முதலான வியாதிகள் தீரும். இச்சாபத்தியம்.

### ஐ. க. பி. அஸ்வகந்திலேகியம்.

5. சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கப்பத்திரி, தாளிசப்பத்திரி, கப்பூர்கிராம்பு, கொடிமுந்திரிப்பழம், பேரீச்சம்பழம், ஏலம்,

சீரகம், லவங்கப்பட்டை, கண்டதிப்பிலி, அரத்தை, வகைக்கு பூ க பொன்னிறமாய் வறுத்துக்கொண்டு அமுக்கராக்கிழங்கு பூ உ0, தூதுவளைவேரின்பட்டைபூ க, கண்டங்கத்திரிவேரின்பட்டைபூ க.. சேர்த்து இடித்து வடிகட்டி, பால் சேர்-க-ல், சீனிசர்க்கரை பூ க0 கலந்து பாகுபோல் செய்து பக்குவமாகிற காலத்தில் ஷை சூரணத்தைப் போட்டு, நெய் சேர்-க தேன் சேர்-க விட்டு, லேகியபக்குவமாய்ச் செய்துகொண்டு, வேளைக்குக் கொட்டைப்பாக்கு அளவு நாள் ஒன்றுக்கு இரண்டு வேளையாக ஒரு மண்டலம் சாப்பிட இருமல், அக்கினிமந்தம், அந்தர்கதசுரம் நீங்கும். இச்சாபத்தியம்.

ஐ. க. பி. சுரத்துக்கு மெருகன்கிழங்கு கடுகு.

6. வெதுப்படக்கியிலை ஒரு பிடியை ஒரு சட்டியில்போட்டு, மெருகன்கிழங்கு பூ வ, மிளகு பூ ௬, பசுவின்மோர்சேர் - உ சேர்த்து உபாயமாய் சுவாலைபோட்டு வேகவைத்து மோர்சுண்டிப் போகிறவரையில் அடுப்பின்மேல் வைத்திருந்து இறக்கிக்கொண்டு, பனவெல்லம் ஒருபலம் சேர்த்து அரைத்துக்கொண்டு சட்டியிற் போட்டு, வீசம்சேர் நெய்விட்டு அடுப்பின்பேரில் வைத்துச்சொற்ப சுவாலைபோட்டு, அடியில் ஒட்டிக்கொள்ளாதபடி சுரண்டியினால் கிளறி லேகியபக்குவமாய்ச்செய்து எடுத்துக்கொண்டு, வேளைக்குச் சிறு கழற்சிக்காயளவு இரண்டுவேளை பத்துநாள்புசித்தால் எவ்விதமான ஜீரண சுவரம் இருந்தாலும் அனுகூலப்படும்.

பத்தியம்.—மோரும் புளியும் சேர்த்துக்கொள்ளலாம். குழந்தைகளுக்கும், ஐந்துவயதுக்கு மேற்பட்டுப் பதினாறுவயதுக்குட்பட்டவர்களுக்கும், சுரம்வந்து ஒன்பதுநாளாயும் விடாமல் தொந்திரவு படுத்தினால் முக்கியமாய் இந்த மருந்தைக் கொடுக்கவேண்டியது. பெரியவர்களுக்குச் சுரம்வந்து அது ஜீரணசுரமாய் இருந்து அசக்தியினாலாவது அல்லது அரோசிகையினாலாவது புளி சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று அபேட்சையிருந்தால் இந்த மருந்தைக் கொடுத்துப் புளியையும் மோரையும் சேர்த்துக்கொள்ளலாம்.

ஐ. க. பி. பலவெதுப்பு என்கிற ஜீர்ணசுரத்துக்கு
சிருங்கார்தி சூரணம்.

7. லவங்கப்பட்டை வராக-க, சிறுநாகப்பூ வராக-உ, ஏலம் வராக ச, மிளகு வராக அ, திப்பிலி வராக கசு, சுக்கு வராக ௩உ, அமுக்கிருவேர், வராக சுச, சர்க்கரை வராக கஉஅ, சரக்குகளை இடித்து வடிகட்டிச் சூரணமாகச்செய்துகொண்டு, சர்க்கரைசேர்த்து நன்றாய்க் குழைத்து, புதியகலயத்தில் போட்டுவைத்துக்கொண்டு, வேளைக்கு இரண்டு

வராகனிடை வீதம் இருபதுநாள்,நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை சுத்த ஜலத்தில் சாப்பிட்டால் ஜீர்ணசுரம், அரோசிகம், அஸ்திசுரம், சரீரஇளைப்பு முதலான வியாதிகள் நீங்கும். இச்சாபத்தியம்.

### ஐ. க. பி. கபரோகத்துக்கும் இருமலுக்கும் நெய்.

8. வெந்தயம், சீனாகாரம், அதிவிடயம், கொத்தமல்லி, கல்நார், சந்தனம்,சுக்கு,திப்பிலி,மிளகு வகைக்கு வடை ரு, பசுவின்நெய் சேர் ஒன்றில் வறுத்து, மிகுதியாயிருக்கிற நெய்யையும் அதோடே சேர்த்து, மெலிய அரைத்துக் கழற்சிக்காய் அளவான உருண்டைகளாய்ச் செய்துகொண்டு, வேளைக்கு ஒரு உருண்டைவீதம் நாள் ஒன்றுக்கு இரண்டுவேளையாக அரைமண்டலம் சாப்பிட்டால் கபரோகம், இருமல், உளைமாந்தம் எங்கிற ரோகம், க்ஷயரோகம் முதலானவைகள் அனுகூலமாகும்.

### ஐ. க. பி. இருமலுக்கு லேகியம்.

9. திப்பிலி, விருட்சியிலுடையவேர், இந்த இரண்டையும் இடித்து வடிகட்டி, பசுவின் நெய்யிலாவது அல்லது பசுவின் வெண்ணெயிலாவது வேளைக்கு-கஉ வடை வீதம் நாள் ஒன்றுக்கு இரண்டு வேளையாக ஒரு மண்டலம் சாப்பிட்டால், கபரோகம், லாகிரி சொஸ்தமாகும். ஸ்திரிகள் புருஷர்களை வசியம் செய்துகொள்ளவேணுமென்று மருந்திடுமென்கிற மௌஷதம் கொடுத்த அதினாலே உளைமாந்தம் என்கிற வியாதி வந்திருந்தாலும் இந்த மருந்தினால் அனுகூலமாகும்.

### ஐ. க. பி. இருமலுக்கு வாய்விளங்காதி சூரணம்.

10. வாய்விளங்கம், சுக்கு, சிற்றரத்தை, திப்பிலி, பெருங்காயம், இந்துப்பு, கண்டுபாரங்கி, இவை சமபாகஞ்சேர்த்துக்கொண்டு, சூரணம்செய்து, அந்தச்சூரணத்தில் நாலில் ஒருபாகம் எவச்சாரம் பொடிசெய்து சேர்த்து, வேளைக்கு உ - வடை தேனில்கலந்து, நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை சாப்பிட்டால் இருமல், இரைப்பு, ஆரோசிகம் சுரம், அக்கினிமந்தம், இவை அனுகூலமாகும்.

### ஐ. க. பி. பஞ்சகாசம் இருத்துரோகத்துக்குப் பிப்பலாதி ரசாயனம்.

11. திப்பிலி பூ கசு, சர்க்கரை பூ அ, வாய்விளங்கம், கண்டுபாரங்கி, மிளகு, சீரகம் வகைக்கு பூ ச, திப்பிலிமூலம், செவ்வியம், கொடிவேலி, சுக்கு, லோகசெந்தூரம், கையாந்தகரை சூரணம் வகைக்கு பூ உ, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், கடுக்காய், தானிக்காய், நெல்லிமுள்ளி வகைக்கு பூ க, ஜாதிக்காய்,

பூ உ, தேன் சேர் அ, இந்த மருந்துகளையெல்லாம் இடித்து வடிக ட்டி, சர்க்கரையுந்தேனும் சேர்த்து அரைத்து, ஒரு பாத்திரத்தில் எடுத்துவைத்துக்கொண்டு, வேளைக்குப் பெரியகழற்சிக்காய் பிரமா ணம் நாள்ஒன்றுக்கு இரண்டு வேளை ஒருமண்டலம் சாப்பிட்டால் பஞ்சகாசம், இருத்துரோகம், பாண்டுரோகம், சுரம், வாயு, அக் கினிமந்தம் முதலானவியாதிகள் அனுகூலமாகும். இந்தமருந்து அ னுபோகத்துக்குவந்தமருந்து. இச்சாபத்தியம்.

ஐ. க. பி. சிலேஷ்மம் முதலானதுக்கு அரத்தை லேகியம்.

12. பேராத்தை, பூ உ, சிற்றரத்தை பூ உரு, கொடிவேலி பூ ருo, செவ்வியம் பூ கஉ, மிளகு, திப்பிலி, கண்டுபாரங்கி, சிறு முட்டி, பேராமுட்டி, லவங்கப்பட்டை, அகில்பட்டை, செம்முள்ளி வேர், ஆடாதோடைவேர், நெருஞ்சில்வேர், வெள்ளைச்சங்கங்குப்பி, கறுப்புச்சங்கங்குப்பி, பிரண்டைவேர், சிறுகாஞ்சிவேர், நீலிவேர், முக்காவேளைவேர், காட்டாமணக்குவேர், ஈரத்தம் இலை வகைக்கு பூ கசு, இவைகளையெல்லாம் இடித்து ஒருபானையிலபோட்டு கசு படி ஜலத்தைவிட்டு உ படி ஆகும்படி காய்ச்சிவடிகட்டி ஜலத்தோடு அo பூ பழயகல்லவெல்லம் சேர்த்துப்பாகுசெய்து, பக்குவமாகிற சமயத்தில்சுக்கு, மிளகு, திப்பிலி, யானைத்திப்பிலி, திப்பிலிமூலம், அதிவிடயம், சிறுதேக்கு, வாய்விளங்கம், லவங்கம், கர்க்கடகசிங்கி, மெருகன்கிழங்கு, பூலாங்கிழங்கு, சிறுநாகப்பூ, தக்கோலம், கொத்த மல்லி, ரேணுகம், வகைக்கு பூ ரு, இடித்துவடிகட்டி ரசசெந்தூ ரம் பூ - ரு, லோகசெந்தூரம் பூ ரு, வெண்காரப்பொரி பூ சு, பொடிசெய்துபோட்டு, தேன் சேர்-அ, விட்டுப் பக்குவமாய்ச் செய் துகொண்டு, வேளைக்குக் கொட்டைப்பாக்களவாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை ஒருமண்டலம் சாப்பிட்டால், இருபதுவகையான சிலேஷ்ம ரோகங்கள், பஞ்சகாசம், சுவாசகாசம், மந்தாக்கினி, மலபந்தம், அன்னத்வேஷம், ஆரோசிகம்,வாந்தி,மார்நோவு,விக்கல், தலைவலி, பீனிசம், வாயுரோகம், முதலானவைகள் சொஸ்தமாகும்.

ஐ. க. பி. வாய்வுக்கும் க்ஷயத்துக்கும் திப்பிலியாதிலேகியம்.

13. திப்பிலி பூ அ, மிளகு, சுக்கு, வாயுவிளங்கம், அமுக்கி ராவேர் வகைக்கு பூ உ, கொடிவேலி, செவ்வியம், அரத்தை, உல ர்ந்த நெல்லிக்காய்த்தகரை வகைக்கு பூ க, இடித்துவடிகட்டி லோகசெ ந்தூரம் பூ க, சேர்த்து, சர்க்கரை பூ ரு, தேன் பூ அ, கலந்து மெலிதாக அரைத்து வேளைக்குக் கொட்டைப்பாக்களவாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை சாப்பிட்டால் வாய்வு, க்ஷயம், சுவாசகாசம் அனுகூலமாகும்.

### ஐ. க. பி. இருமலுக்கு லேகியம்.

14. வெண்காரம், திப்பிலி, புழுங்கலரிசி, மிளகு, கிராம்பு வகைக்கு பூ உ, புழுங்கலரிசிமாத்திரம் நெய்யில்வறுத்து இடித்துக்கொண்டு மற்றச்சரக்குகளை இடித்து வடிகட்டி சேர்த்து நெய்யும் அதில்கலந்து லேகியமாகச்செய்துகொண்டு, கழற்சிக்காய் அளவான உருண்டைகள் வேளைக்கு ஒரு உருண்டையாக உட்கொண்டுவந்தால் இருமல் சொஸ்தமாகும்.

### ஐ. க. பி. இருமலுக்குத் தேற்றான்கொட்டைலேகியம்.

15. தேற்றான்விதை பூ ச ஜலத்தில்முப்பது நாழிகை ஊறவைத்து, ஒடுப்பில்லையின்மேல் நன்றாய்த்தேய்த்து மேல்தோலையெடுத்துப்போட்டு, துணியால் துடைத்து சுக்கு, திப்பிலி, மிளகு, சித்தரத்தை வகைக்கு, பூ க, சேர்த்து பால்விட்டு, மெலிதாக அரைத்து, ஒருசட்டியில் எடுத்துகொண்டு, சர்க்கரை பூ அ, நெய் சேர்-வ, பால்சேர்-க,விட்டு நன்றாய்க்கிளறி அடுப்பின்மேல்வைத்து லேகியபக்குவமாய்ச் செய்துகொண்டு, வேளைக்குக் கழற்சிக்காயளவு இரண்டுவேளை சாப்பிட கபச்சுரம் கபத்தினால், உண்டான இருமல் சொஸ்தமாகும்.

### ஐ. க. பி. க்ஷயரோகத்துக்கு மகாக்ஷாபகாதி லேகியம்.

16. அத்திமுள்ளி பூ-க00, பாதிரிவேர், வட்டத்திருப்பிவேர், சீந்திற்கொடி, ஆடாதோடை, சிற்றாமுட்டி, பேராமுட்டி, காட்டாமணக்குக்கிழங்கு, ஓரிலைத்தாமரை, மூக்குத்திப்பூண்டு, தழுதாழை, வில்வம், சித்திரமூலம், பெரியாமணக்கு, நொச்சி, அம்மையார் கூந்தல், சிறுவழுதலை, தூதுவளை, குமிழ், கண்டுபரங்கி, செவ்வியம்; இந்தவேர்வகைகளெல்லாம் வகைக்கு பூ-உ0, சுக்கு பூ ச0, கடுக்காய் பூ க00, இவைகளைச் சேர்த்து இடித்துஆறுபானையில சமபாகமாகப் போட்டு ஆறு அடுப்பின்பேரில் வைத்துப் பானைஒன்றில் பதினறு மரக்கால் தண்ணீர்வூற்றி, நாள் ஒன்றுக்கு ஒருஜாமம் அதின் கீழ் சுவாலைபோட்டு, ஒவ்வொரு அடுப்பிலும் ஒருபெரிய கட்டையையிட்டு நெருப்பு அவியாதபடி எப்பொழுதும் அனல் இருக்கும்படியாகச்செய்யவும். இவ்விதமாக ஆறுநாள் சுவாலைபோட்டு மீதிவேளையில் கட்டையின் நெருப்பு அவியாதபடி வைத்திருந்து ஏழாம் நாள் ஒவ்வொரு பானையிலும் ஒரு மரக்கால் கியாழமிருக்கும்படியாக சுவாலை போட்டு எரித்து ஒவ்வொரு மரக்கால் கியாழத்தை எடுத்துக்கொண்டு எல்லாம் ஒருபாத்திரத்திற் போட்டு, அதை மறுபடியும் அடுப்பில்வைத்து ஒருமரக்காலாகும்படியாகக் காய்ச்சி, அதில் பழயவெல்லம், பூ - க00, சேர்த்து, மெலிதானசல்லா

வின் ஒரு சவுக்கத்தினால் அதை வடிகட்டி., மறுபடியும் அந்தவடிகட்டின ஜலத்தை அடுப்பின்பேரில்வைத்து சுவாலைபோட்டுப் பாகுசெய்யும்பொழுது நொச்சிவேர், கரிசலாங்கண்ணி, வசம்பு, மஞ்சள், இஞ்சி, ஆடாதோடைவேர், சீந்திற்சர்க்கரை, வல்லாரைசமூலம், அத்திமுள்ளிவேர், எருக்கம்மொட்டு, வெள்ளைச்சாட்டரணை வேர், வாய்விளங்கம், ஓமம், கருஞ்சீரகம், நல்லசீரகம், இந்துப்பு வளையலுப்பு, பொட்டிலுப்பு, சுக்கு, சமுத்திரலவணம், பெருங்காயம், கோஷ்டம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, செவ்வியம், கர்க்கடகசிங்கி, கண்டுபாரங்கி, தாமரைவளையம், அதிவிடயம்,கடுகுரோகிணி சித்தரத்தை, பேரரத்தை, இவைகள் தினுசுக்கு, வராக-உ,ஆகசரக்கு வகை முப்பத்திமூன்றுக்கு வராக-சுசு, திப்பிலி வராக-சுசு, இவைகளை இடித்துவடிகட்டி அந்தப்பாகத்தில் போட்டுப் பக்குவமாகிற சமயத்தில் தேன் ஒருமரக்கால் ஊற்றிக் கரண்டியினாற்கிளறி இலேகியபதமாய்ச் செய்துகொண்டு, வேளைக்குக் கொட்டைப்பாக்களவு நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை ஒருமண்டலம் சாப்பிட்டால் பதினொருவித க்ஷயரோகங்களும் காசசம்பந்தமான அநேக ரோகங்களும் சொஸ்தமாகும். இச்சாபத்தியம்.

ஐ. க. பி. இரத்தகாசத்துக்கு மருந்து.

17. கடுக்காதோல், தான்றிக்காய், நெல்லிப்பருப்பு வகைக்கு வராக - கக, வாலுளுவை அரிசி, வராக உஉ, கையாந்தகரைப்பொடி, நொச்சியிலைப்பொடி, கொடிவேலி, தகரவிதை, கருவாப்பட்டை, சீந்திற்கொடி, வகைக்கு வராக சுஉ இடித்து வடிகட்டி வெல்லம், வராக அ0, பாகுசெய்து அதில் இந்தச்சூரணத்தைப்போட்டுக் கலந்து ரு00, உருண்டைகளாகச்செய்து கொண்டு, வேளைக்கு ஒரு உருண்டையாக ஒருமாதம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் சரீரத்தில் இருக்கிற வியாதியெல்லாம் நீங்கி அனுகூலமாகும். இரண்டாமாதத்தில் சரீரம் கெட்டியாகும். மூன்றாமாதத்தில் சரீரத்தில் இருக்கிற வறட்சி நீங்கும். நாலாம்மாதத்தில் சரீரத்தில் பலமுண்டாகும். ஐந்தாம் மாதத்தில் மேனியில் நல்ல நிறமேறும். ஆறாம்மாதத்தில் சரீரத்தில் அதிக பலமுண்டாகும். ஏழாம்மாதத்தில் கண்களில் தேஜஸ் உண்டாகும். எட்டாம்மாதத்தில் அதிக பிரக்ஞையிருக்கும். ஒன்பதாமாதத்தில் சித்தசுத்தி ஆகும். பத்தாம் மாதத்தில் சித்தசுத்தியின் சித்தி அடையலாம்.

ஐ. க. பி. வாதசிலேத்ம அக்கினிமந்தத்துக்குத் தாளிசவடகம்.

18. தாளிசபத்திரி, மிளகு, செவ்வியம், கிராம்பு, ஏலம், சிறுநாகப்பூ, லவங்கப்பட்டை, விலாமிச்சைவேர் வகைக்கு பூ-க௨, திப்

பிலிமூலம், திப்பிலி வகைக்கு பூ உ, சுக்கு பூ க, இடித்துவடிகட்டிச் சேலம்சர்கரை சேர்-உ, சேர்த்து, அரைச்சேர்பாலைத் தெளித்து நன்றாய்க்கிளறி, ஒருகுண்டு சட்டியில் இரண்டுபடி பசுவின்பாலையும் இரண்டுபடி ஜலத்தையும் ஊற்றி, அந்தக்குண்டுசட்டியின் வாயை ஒருசவுக்கத்தால்மூடி, அந்தசவுக்கத்தின்மேல் அந்தச் சூரணத்தைவைத்து, ஆவிவெளியே போகாதபடி அதின்பேரில் ஒருசட்டியைக்கவிழ்த்து, அடுப்பின்பேரில் வைத்துப்பால்சுண்டுகிற வரைக்கும் சுவாலைபோட்டு, பிறகுவெந்திருக்கிறசூரணத்தை ஒருபலகையின்பேரில்கொட்டி அதின்பேரில்ஒருசேர்பசுவின்நெய்யைவிட்டு, ஆறுமலிருக்கும்பொழுதே கொட்டைப்பாக்களவான பிலலைபில்லையாகத் தட்டிஒரு பீங்கானில் வைத்துக்கொண்டு, வேளைஒன்றுக்கு ஒருபில்லையாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை வீதம் சாப்பிட்டால் வாதரோகம், சிலேத்துமம், வறக்ஷி, கிராணி, பாண்டுரோகம், மார்வலி, சுரத்தினால் உண்டான பாண்டுரோகம், வாயுவினால் உண்டான மூலரோகம், குன்மம், கபம், பீனசம், இரைப்பு, இருமல், நெஞ்சுவறட்சி, நெஞ்சுவலி, முதலானரோகங்கள் அனுகூலமாகும்.

ஐ. கூ. பி. பீனிச சுவாசத்துக்குத் தைலம்.

19. நொச்சி, கருநொச்சி, எருக்கம்பழுப்பு, பேப்பீர்க்கு, பச்சைமஞ்சள், பருத்தியிலை, ஆடுதொண்டஇலை, தினுசுக்கு - வ - படிரசம். அரத்தை, சிறுதேக்கு, மிளகு, சுக்கு, செவ்வியம், ஏலம், அகிற்பட்டை, வெள்ளைப்பூண்டு வகைக்கு வூ-உ, நல்லெண்ணெய் சேர்ச, இந்த மருந்துகளையெல்லாம் மேற்சொல்லிய இரசத்தில் அரைத்து மீதியிருக்கிற இரசமும் ஔஷதமும் எண்ணெயிற் கலந்து மெழுகுபக்குவமாய் எண்ணெய் காய்ச்சி தேய்த்துக்கொண்டால் சுவாசகாசம் பீனசம், தூர்மல், மண்டைக்குத்தல், முதலானரோகங்கள் சொஸ்தமாகும். பத்தியம்:—இந்த எண்ணெய் தேய்த்துக்கொள்ளுகிற நாளில் வாயுபதார்த்தங்களும், புளியும் தள்ளுபடி செய்க.

ஐ. க. பி. க்ஷயத்துக்குத்தைலம்.

20. சுக்கு, திப்பிலி, கண்டதிப்பிலி, மிளகு, சீரகம், தாளிசப்பத்திரி, குராசானிஓமம், அக்ராகாரம், ஏலம், ஐடாமாஞ்சி வகைக்கு வூ-உ, இடித்துவடிகட்டி க-சேர் சிற்றாமணக்கெண்ணெயில் இந்தச் சூரணத்தையும், க-வூ கற்கண்டு பொடிபோட்டு நன்றாய்க் கலக்கிச் சூரியபுடம்வைத்து இராத்திரி சாப்பிட்டுத் தூங்குகிற சமயத்தில் ஒரு வூ இடை அளவு உட்கொள்ளவேண்டியது. இவ்விதமாக ஒரு மண்டலம் செய்யின் க்ஷயரோகம் அனுகூலமாகும். இச்சாபத்தியம்.

ஐ. க. பி. பெரும்பாட்டுக்கு நெய்.

21. நாகல்பட்டை வடை - உடு, நியாமஞ்செய்து வடிகட்டி யெடுத்துக்கொண்டு, ஒ-படி பசுவின்நெய்யையூற்றி, ஏலம், லவங்கப்பட்டை, கர்க்கடகசிங்கி, காட்டத்திப்பூ, காசிக்கட்டி, மரமஞ்சள், சீரகம், சிறுநாகப்பூ, அதிமதுரம், கோஷ்டம, விளாம்பிசின் வகைக்கு பூ-ஒ, அபினி பூ-க, மெலிதாக அரைத்துப்போட்டுக் குழப்பி அடுப்பிலேற்றி, மெழுகுபக்குவமாகக் காய்ச்சிக்கொண்டு, வேளைக்கு உ-வடை விதம் நாளொன்றுக்கு இரண்டுவேளை ஒரு மண்டலம் உட்கொண்டால் பெரும்பாடு எலும்புருக்கி, புருஷமேகம் முதலிய வியாதிகளும் அனுகூலமாகும். இச்சாபத்தியம். இது அனுபவத்திற்கு வந்த மருந்து.

ஐ. க. பி. வறட்சி எலும்புருக்கிமேகத்துக்கு பூசினிக்காய் நெய்.

22. கல்யாணபூசினிக்காய்ச்சாறு, தண்ணீர்விட்டான்கிழங்குச்சாறு, வாழைக்கிழங்குச்சாறு, வெள்ளரிக்காய்ச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, வாழைப்பூச்சாறு, மாதுளையின்பழச்சாறு, வெட்டிவேர்த் தண்டின்சாறு, நெருஞ்சில்சாறு, கரும்பஞ்சாறு, இளநீர், பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச்சாறு, பசுவின்பால், சீந்திற்றண்டுசாறு, செங்கழுநீர்க்கிழங்கின்சாறு, அமிர்தவல்லிக்கிழங்கின்சாறு, பசுநெய் வகைக்கு படி-க, ஒன்றுபடச்சேர்த்து, அடுப்பிலேற்றிச் சுவாலைத்தியாலெரித்து, பக்குவமானவுடனே, அந்தநெய்யை வடிகட்டி எடுத்துக்கொண்டு, அதில்-வ-படி சீனிச்சர்க்கரையை கலந்துகொண்டு, காலைமாலைகளில் ஒரு சிறிய உருண்டை அளவு உட்கொள்ள வறட்சி, எலும்புருக்கி, பிரமேகம், பித்தம், காமாலை, கைகாலெரிவு, உடம்பெரிவு, குத்தரிப்பு, இரத்தமேகம், செம்பிரமேகம் நீங்கும். தாதுவிருத்தியுண்டாம்.

நெய்புருக்காதபடி ஔஷதம் வாங்கவேண்டியதானாலும், அந்த நெய்யிலுள்ள கடுகைவாங்கவேண்டியதானாலும், மேற்சொல்லிய படி ஒருபடி நெய்யைச்சேர்க்காமல், (ஹ) படி நெய்யைச் சேர்த்துக்கொண்டு, மேற்சொல்லியபடி மருந்துசெய்துகொண்டு, இம்மருந்தை வேளை ஒன்றுக்கு இரண்டு வடையளவு நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை ஒரு மண்டலம் உட்கொண்டால் மேற்சொல்லிய வியாதிகள் நீங்கும்.

ஐ. க. பி. விந்துவுக்கும் வார்த்திக்கும் நெய்.

23. பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், நெய்ச்சட்டிவேர், ஒரிலைத்தாமரைவேர், கோரைக்கிழங்கு, நன்னாரிவேர், நீர்பூலாவேர், ஆவாரைவேர்ப்பட்டை, குவளைவேர், நெல்லிமுள்ளி, சந்தனம் வ

கைக்கு வடை-௫, பெருஞ்சாதிக்காய்-௨, சண்பகப்பூ, ஏலம், லவங்கம், அதிமதுரம், கோஷ்டம், திப்பிலி, வகைக்கு வடை-௪, வெவ்வேறாக அரைத்து சிற்றிற்றண்டின்சாறுசேர்-க, பசுநெய்படி-௨, பசுவின்பால்படி-௨, சேர்த்துக்குழப்பிப் பக்குவமாய்க் காய்ச்சி எடுத்துக்கொள்க. இதனைத்தலையிலும் மார்பிலும் தடவலாம். நசியமும் செய்யலாம். உள்ளுக்குக்கொடுத்தால் வாந்தி, விக்கல் அனுகூலமாகும்.

ஐ. க. பி. ரத்தகாசத்துக்கு நெய்.

௨௪. நன்னாரிவேர், வரைச்சுண்டிவேர், வட்டத்திருப்பிவேர், தூதுவளைவேர், தூதுவளை இலை, மாதுளைச்சாறு, மாதுளம்பூச்சாறு, வாழைக்கிழங்குச்சாறு, வாழைப்பழச்சாறு, சிறுகீரைவேர், அத்திப்பட்டை, மாங்கொட்டை, ஆலம்பட்டை, அரசம்பட்டை, நாவற்கொழுந்து, ஆலங்கொழுந்து, அரசங்கொழுந்து, தண்ணீர்விட்டான்கிழங்கு, கலியாணபூசினிக்காய்ச்சாறு, வெட்டிவேர், விலாமிச்சைவேர், சிறுதிற்றண்டு, நெய்தற்கிழங்கு, தாமரைவளையம், பொன்னாங்காணிவேர், முசுமுசுக்கைவேர், முசுமுசுக்கைப்பழம், சங்கமிலை, சங்கம்பழம், கொட்டைக்கரந்தைச்சாறு, வல்லாரை, கர்ப்பூரவல்லிச்சாறு, அதிமதுரம், கொத்தமல்லி, கோஷ்டம், சந்தனம், திப்பிலி, ஈரவெண்காயம், திறுசுக்கு வடை-௨, பசுவின்நெய் சேர்-க, பசுவின்பால் சேர்-க, சேர்த்து மெழுகுபதமாய்க்காய்ச்சிக்கொண்டு, வேளைக்கு ஒரு முட்டைப்பிரமாணம் உட்கொண்டால் இரத்தவாந்தி சொஸ்தமாகும்.

ஐ. க. பி. தலைநடுக்கல், கைநடுக்கல் முதலான பித்தத்துக்கு அதிமதுரக்கிருதம்.

௨௫. அதிமதுரம் பூ-௫, சீரகம், விலாமிச்சைவேர், கொத்தமல்லி, ஏலம், லவங்கப்பத்திரி, கிராம்பு, ஜாதிக்காய், கோஷ்டம், சந்தனம், நெய்தற்கிழங்கு, நன்னாரிவேர், கூகைநீர், நெல்லிமுள்ளி, கொடிமுந்திரிப்பழம், தாமரைவளையம், வெட்டிவேர், சிறுகீரைவேர், பொன்னாங்காணிவேர், நெருஞ்சில்வேர் திறுசுக்கு பூ-௨, நெய் சேர்-௪, பால் சேர்-௨, இந்தச்சரக்குகளை யெல்லாம்சேர்த்து நெய்யாகக்காய்ச்சிக்கொண்டு, வேளைக்கு இரண்டு வராகனிடைவீதம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் தலைநடுக்கல், கைநடுக்கல் முதலான வியாதிகள் சொஸ்தமாகும்.

ஐ. க. பி. சகல பித்தத்துக்கும் ஏலாதி சூரணம்.

௨௬. ஏலம், சீரகம், சன்னலவங்கப்பட்டை, லவங்கப்பட்டை, அதிமதுரம், நெல்லிமுள்ளி, லவங்கப்பத்திரி, ஜாதிக்காய், கருவேப்பிலைக்கொழுந்து, சந்தனத்தூள், ஜடாமாஞ்சி, கிராம்பு திறுசுக்கு பூ-க,

கண்டதிப்பிலி, விலாமிச்சைவேர், வகைக்கு வடை உ, சிவதைவேர்பூ உ, சர்க்கரை சேர்-ஙு, நெய்சேர்-வ,தேன்சேர்-ஜ, இவைகளை ஒன்றாகச்சேர்த்து லேகியம் செய்துகொண்டு, வேளைக்கு நெல்லிக்காய் பிரமாணம் நாளொன்றுக்கு-உ-வேளை ஒரு மண்டலம் உட்கொண்டால் சகலபித்தவாய்வும் நீங்கும். ஆரோக்கியமுண்டாம்.

ஐ. க. பி. மேகபித்தவாய்வுக்குகர்ச்சூராதிலேகியம்.

32. பேரீச்சம்பழம், கொடிமுந்திரிப்பழம், நெல்லிமுள்ளி, இலுப்பைப்பருப்பு, நல்லசந்தனம், அதிமதுரம், நெருஞ்சிற்காய், பூச்சர்க்கரைக்கிழங்கு, கல்யாணபூசினிக்காய்விதை, தண்ணீர்விட்டான்கிழங்கு, கொத்தமல்லி, லவங்கம், நீர்முள்ளிவிதை சமபாகமாகச்சேர்த்து, சூரணித்து வடிகட்டியபின், அந்தச்சூரணத்துடன் சமபாகம் சர்க்கரையைக் கலந்துகொண்டு, காலையில் சாப்பிடுவதற்குமுன் இதை யொருகடிபிரமாணம் ஒருமண்டலம் உட்கொண்டால், மூத்திரகிரிச்சரம், அக்கிராணபித்தம்,சர்வமேகம்,அங்கதாகம்,சிரோதாகம், கப்போர்வு, கைகாலெரிவு, அரோசிகம் முதலியவியாதிகணீங்கும்.

ஐ. க. பி. இரத்தபித்தம், ஆம்பல்பித்தத்துக்குகர்ச்சூராதிரசாயனம்.

33. பேரீச்சம்பழம் பூ-ஙுஉ, சர்க்கரை பூ-ஙுஉ, சுக்கு, திப்பிலி, மிளகு, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், சடாமாஞ்சி, சிற்றுமுட்டிவேர், பேராமுட்டிவேர், நாகமல்லிவேர், சதகுப்பை, பூலாங்கிழங்கு, சிறுநாகப்பூ, கோரைக்கிழங்கு, நல்லசந்தனம், நன்னாரிவேர், காட்டெருமைப்பால், இலந்தைவிதை, தக்கோலம், ரேணுகம், கொடசப்பாலைவிதை, கிராம்பு, கருஞ்சீரகம், நல்லசீரகம், வெட்டிவேர், விலாமிச்சைவேர், கோஷ்டம், விளாம்பழம், கொடிமுந்திரிப்பழம், குங்குமப்பூ, பருத்திக்கொட்டைப்பருப்பு, சாதிக்காய், சாதிபத்திரி, கையாந்தகரைசூரணம், வகைக்கு பூ-உ, பசுநெய் படி-க, பசுவின்பால்படி உ, தேன்படி-க, சேர்த்து ரசாயனஞ்செய்துகொண்டு, வேளைக்கு இந்த ரசாயனம் நெல்லிக்காயளவெடுத்து அதனுடன் அரைப்பணவிடை இராஜமிருகாங்கம் என்கிறமருந்தைச்சேர்த்து நாள் க-க்கு உ-வேளை ஒருமண்டலம் உட்கொண்டால்இரத்தபித்தம், ஆம்பல்பித்தம், சிரோபிரமணம்,அனல்பைத்தியம், மனப்பைத்தியம், மூர்ச்சை, ஊர்க்காரம், பீடகம், தொடக்குப் பைத்தியம் உக-வகையும், நாலுவிதசுரமும், க்ஷயம், உளைமாந்தம், அரமானசூலை, சந்தாபம், அசீர்ணம், அரோசிகம், தாகம், கண்டகோஷணம் முதலியவியாதிகளும் நீங்கும்.

ஐ. க. பி. பித்தத்துக்கும், இரத்தவாந்திக்கும் கர்ச்சூராதிலேகியம்.

34. பேரீச்சம்பழம் பூ-ஙுஉ, கொடிமுந்திரிப்பழம் பூ-கச, தண்ணீர்விட்டான்கிழங்குசூரணம் பூ-ச, கொத்தமல்லி, பற்பாடகம்,

சதகுப்பி, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம், சிறுநாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சைவேர், லவங்கம், திப்பிலிமூலம், சீரகம், ஓமம், பூலாங்கிழங்கு, பெருநாகப்பூ, வாய்விளங்கம், முத்தக்காசு, அதிமதுரம், கோஷ்டம், அதிவிடயம், நல்லசந்தனம், கோரோசனை, சடாமாஞ்சி, வகைக்கு பூ-உ, சேர்த்து இடித்து வடிகட்டிச் சூரணித்துவைத்துக்கொண்டு, அறுகம்வேரின்சாறு, பசுவின்பால், தண்ணீர்விட்டான்கிழங்கின்சாறு, இந்தச்சாறு வகைக்குப் படி உ-சேர்த்து, அதில் சர்க்கரைபடி—உ, சேர்த்து வடிகட்டிப் பாகுசெய்து, அந்தப் பாகத்தில் மேற்சொல்லிய சூரணத்தையும் தேன் சேர்-க, நெய்சேர்-க, சேர்த்து பக்குவாய் லேகியம்செய்துகொண்டு அந்தலேகியத்தில் சூ0-பணவிடை ரசபஸ்பம் சேர்த்து நெல்லிக்காய்பிரமாணம் நாள் க-க்கு, உ-வேளை ஒருமண்டலம் உட்கொண்டால் எவ்விதபித்தமும் பித்தத்தாலுண்டாகிற கூகூ-வியாதிகளும், இரத்தவாந்தியும், கக-விதமான வாதரோகங்களும் நீங்கும்.

ஐ. க. பி. பித்தத்துக்கு நிம்பாதிலேகியம்.

35. எலுமிச்சம்பழம், புளியிலை, முசுமுசுக்கை, வில்வவேரின் சாறு, துரிஞ்சி, இவைசுக்கு ஐ-படி, ரசத்தையெடுத்து, ஏலம், லவங்கம், சீரகம், அதிமதுரம், திப்பிலி, நெய்பொரி, வகைக்கு வ-ச, சர்க்கரை பூ-ச, தேன் சேர்—ஒ, சேர்த்து லேகியம் செய்துகொண்டு பித்தாதி விக்கல், குன்மம், ஆரோசிகம் ஆகிய இவை இந்தலேகியத்தைக் காலையில் உட்கொண்டால் தீரும்.

ஐ. க. பி. கைகால் எரிவுக்கு மருந்து.

36. இலந்தையிலை, கருவையிலை, பிரைக்காயிலை, நெல்லியிலை, முசுமுசுக்கையிலை இடித்து ஒருபானையிற்போட்டுத் தண்ணீர்விட்டு, ஓர் இராமுழுவதும் ஊறவைத்து, காலையில் அதை மத்தினால் கடைந்து மேலே நுரையைப்போல் வருகிற வெண்ணெயையெடுத்துக் கொண்டு கையிலும் காலிலும் பூசுக. இப்படி மூன்றுநாள் பூசினால் கைகால் எரிவுதீரும். மேற்சொல்லிய ஐந்துதினுசு இலைகளின் ரசத்தைப் பசுவின்பாலில் சேர்த்துக் காய்ச்சித் தயிராக்கிக்கடைந்து வெண்ணெயெடுத்து அதைக் கை காலிற் பூசினால் பித்தத்தால் அல்லது மேகத்தாலுண்டான எரிவந்தமாயிருந்தாலும் நீங்கும்.

ஐ. க. பி. அக்கினிமந்தம், ஆரோசிகத்துக்கு பஞ்சகோலாதிசூரணம்.

37. திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரமூலம், கல்லுப்பு, வளையலுப்பு, இந்துப்பு, பொட்டிலுப்பு, சீரகம், ஓமம், சதகுப்பை, சதிசாரம், எவாச்சாரம், மிளகு, பெருங்காயம், வகைக்குபூ-க ஒன்றாகச்சேர்த்து இடித்து வடிகட்டி அந்தச்சூரணத்துக்குச் சம




...தம்பராம்பிள்ளை

...யம் முதலானரோகங்களுக்கும்

...தாதுபுஷ்டிக்கும், பூரண சந்திரோதயம்.

...தங்கம் பூ-க, ரசம் பூ-அ, கந்தகம் பூ-கசு, இந்த ...
ருந்தையும் பொற்றலைக்கையாந்தகரைச்சாற்றைவிட்டு ஒருநாள்
...ரைத்து, கற்றாழைச்சாற்றைவிட்டு ஒருநாள் அரைத்துக்காயவைத்
காசிக்குப்பியிற்போட்டு அதின்வாயை மாவுக்கல்லால் அடைத்
அதின்மேல் மண்துணிசுற்றி, ஒருபானையில் பாதிவரையில் மண
போட்டு அதில் இந்தக்குப்பியைவைத்து, குப்பியைமூடிக்கொள்
படியாக அந்தப்பானையில் மணல்போட்டு பானையை அடுப்பின்
ல்வைத்துத் தீபாக்கினியைப்போல் ஒருநாள் சுவாலைபோட்டு, இ
டாம்நாள் கமலாக்கினி, மூன்றுநாள் காடாக்கினி, இவ்விதமாய்
ன்றுநாள்செய்து ஆறவைத்து, அந்த மருந்துக்குப்பியை உடை
மருந்தை எடுத்துக்கொண்டு மருந்துக்கு நாலில் ஒருபாகம் பச்
ர்ப்பூரத்தைச்சேர்த்துக் கிராம்பு, சாதிக்காய், கஸ்தூரி, இந்தமூன்
ஒவ்வொன்றும் மருந்துக்கு அ-ல் ஒருபாகம் சேர்த்துக்கொண்
ம்மருந்துகளை எல்லாம் வெற்றிலைச்சாறுவிட்டு மிருதுவாக ந-
அரைத்து, பி... ...ிமணியைப்போல் மாத்திரைசெய்தும், ...
டிெ... கொள்ளலாம். வேளைக்கு கால்பணவி
...ிலைச்சாறும் ...தேனோடு சேர்க்கக்கூடு...

.டு எருக்கம்பால் உ-சேர் விட்டு ச-சாமம், அரைத்து பெ. ற்றலைக்
கயாந்தகரைச் சாற்றைவிட்டு ச-சாமம் அரைத்து, பிறகு ஒருசட்
யின் மத்தியபாகத்தில் இந்தமருந்தையெல்லாம் ஒருசாண் அகல
க்கர அடையாகத்தட்டிக் காயவைத்துக் காய்ந்தபிறகு இன்னொரு
ட்டியை அதின்பேரில்கவிழ்த்து, மண்சீலைசெய்து அடுப்பில்வைத்
௧௦-சாமம் வடவாக்கினி சுவாலைபோட்டு, தானே ஆறினபிறகு
ந்தை யெடுத்து ஒரு கல்வத்திற்போட்டு மிருதுவாகப் பொடி
ய்து ஒரு குப்பியில் நிரப்பிவைத்துக்கொண்டு, வேளைக்கு ௨-
ாவிடையாக தேனிற்கலந்து உள்ளுக்குக்கொடுத்துப் பிறகு நாய்
ளை வேரோடு வரு-உ வறுத்துக்கொண்டு, பின்பு க-வரு மிளகை
சேர்த்து சிறுவறலாக வறுத்து, க-வரு சித்தரத்தை நறுக்கிபோ
உ-சேர் தண்ணீரைவிட்டுக்காய்ச்சி, கால்சேர்கியாழமாக இறக்கி
காண்டு உள்ளுக்குக்கொடுக்க. இவ்விதமாய் உ-வேளை ௧௦-நாள்
ாடுத்தால் மூத்திரக்கிருச்சிரம், மூத்திரம் அடைதல், ஸ்திரீகளுக்கா
ு புருஷர்களுக்காவது மூத்திரத்தானத்தில் கல் அடைத்துக்
ாண்டிருக்கிறதும், துர்மாமிச மிருக்கிறதும், சாபி அடைத்து
காண்டிருக்கிறதும், நீங்கிச்சொஸ்தமாகும். கல்லடைத்துக்கொ
டிருந்தால் கண்ணுக்குத்தெரியும். மேல் எ...கியிருக்கிற அனுபா
தோடு இம்மருந்தை உட்கொண்டுவந்தா. ...க்கமான
வியாதிகளும் சொஸ்தமாகும். பிரசித் ...

...கு குண
...செய்தும் வைத்துக்
யாக தேனிற்கலந்து வெ...
உ-வேளை அரைமண்டலம் சாப்பிட்டால க்ஷயம் முத...
ளும் நிவர்த்தியாய் தாதுவிர்த்தியாகும். அனுபானவிசேஷத்தோடு
கொடுக்கலாம்.

### சி. பி. வசந்தகுசுமாகரம்.

92. வெள்ளிபஸ்பம் பூ-உ, சுவர்ணபஸ்பம், வங்கபஸ்பம்
பஸ்பம், காந்தபஸ்பம் வகைக்கு பூ-க, அப்ரகபஸ்பம், ரசபஸ்
முத்துப்பஸ்பம் வகைக்கு பூ-ச, கல்வத்திற்போட்டு முறை...
வின்பால, கரும்புரசம், ஆடாதோடைசாறு, நலலசலம், வெ...
வேர்கியாழம், மஞ்சள்தண்ணீர், வாழைக்கிழங்குச்சாறு விட்...
வொருநாளும், அரைத்து க - வடை பில்லைகளாகச்செய்து நி...
காயவைத்துக்கொண்டு வேளைக்கு ஒரு குன்றிமணி அளவு தே...
சர்க்கரையும் கலந்து, இரண்டுவேளை சாப்பிட்டுக்கொண்டுவ...
மேகம், க்ஷயம், பித்தக்ஷயம் சொஸ்தமாகும். பிரமரோகமும்...
ஸ்தமாகும்.

### சி. பி. இராஜமிருகாங்கம்.

93. ரசபஸ்பம் பூ-ந, சுவர்ணபஸ்பம், வெள்ளிபஸ்...
...ரபஸ்பம், முத்துப்பஸ்பம், கந்தகம், தாளகம் வகைக்கு பூ...

ல் மூத்திரசமய,

தமானமருந்து. மூங்க

ங்கில்இல, ... ...ற சாந்தரசத்தின்வேர், கண்

கதஸ்தூரியின்வேர், சிரகம்வகைக்கு வடை-க, ஒன்றாய்சேர்த்துக்கியா

ழம்செய்துகொண்டு மேற்சொன்ன மருந்தைத் தேனிற்கலந்துகொடு

த்தின்மேல் கொடுக்கவேண்டியது. இவ்விதமாய் உ-வேளை ஒரும

லம் உட்கொண்டால் வாய்வுசம்பந்தமாய் சரீரம் ஸ்தூலமாயி

து சுரோணிதம் அடைத்துக்கொண்டிருக்கிற ஸ்திரீகளுக்குக் கி

ாய்மாதத்துக்கு ஒருதரம் ருதுவுண்டாம். சொல்ப உதரம் விழு

பாக்கிவாய்வினால் அடைத்துக்கொண்டிருந்து ருதுவாகிறதற்

- அல்லது ரு-நாள் அப்பியந்தரமானால்-ரு-நாள் இந்தமருந்

கொடுக்க. இவ்விதமாய் ச-அல்லது ரு-மாதம்கொடுத்தால்

திநீங்கும். இரத்தவிருத்தியில்லாமல் சரீரம் அத்தியந்தகிருஷி

ருக்கிற ஸ்திரீகளுக்கு உதரம் கிரமப்படி விழாமலிருந்தால், இந்த

தைக் கொடுக்கலாகாது. திப்பிலி, மிளகு வறுத்துப் பொடிசெ

அந்தப்பொடியை ஒரு சிமிட்டா எடுத்துத் தேனிற்கலந்து மே

ல்லியிருக்கிற மருந்தை ஒ-பணவிடையாக சேர்த்துக்கொ

ப்பிறகு அதின்மேல் கஉ-வடை சுக்கின்கியாழம் செய்துகொடு

இவ்விதமாய் இரண்டுவேளை ஒருமண்டலம் கொடுத்தால்அக்

தம் சொஸ்தமாகும்.

5

ன்று சொல

சாமம்வரைக்கு

சுவாலைபோட்டுப ...                                              ரண்...

த்து, அதை உடைத்து அதின ...                                    மருந்தையெ

து ஒரு சாண் துணியில்கட்டி, சீந்திற்கொடி. சேர்-கூ, கொண்டு

து அதன் மேல்தோலை எடுத்து இடித்து ஒரு பானையிற்போட்டு க

படி தண்ணீரைவிட்டு, ஷை. மருந்தின் மூட்டையைத்தோளேந்

மாய் தொங்கவிட்டு, ஒருபடிதண்ணீராகும்படி சுவாலைபோட்டு,

றகு அந்தமருந்தை எடுத்துக்கொண்டு சுத்திசெய்த கல்வத்திலிட்

இரண்டுநாள் பொடிசெய்து ஒரு டப்பியிலாவது டப்பாவிலாவது

எடுத்துவைத்துக்கொண்டு, வேளைக்கு ௨-பணவிடை இரண்டுவே

ளையும் அனுபானத்தில் உட்கொண்டுவந்தால் சகல வியாதிகளும்

சொஸ்தமாகும் மேற்சொல்லியிருக்கிற காசிகுப்பி காசி தேசத்துக்

குப்பியென்று தெரிந்துகொள்க.

மூத்திரகிருச்சரத்துக்கும் ஸ்ரீகள் சரியானகாலத்தில்
ருதுவாகாமலிருக்கிறதற்கும், அக்கினிமாந்தத்திற்கும்
ஐ. க. பி. பஞ்சாக்கினிசெந்தூரம்.

90. பூநீர் வரா-௫, நவாச்சாரம் வரா-௧, ரசம் வரா-௨, நாலா
ய்ச்சுவெடியுப்பு வரா-௬, நெல்லிகந்தகம் வரா-௮, சிட்டம் வரா
ஊசி காந்தம் வரா-௧௨, உளியின் அரப்பொடி வரா-௧௪, கல்

ஞகா
டியில் போ
, அதின்பேரி
ப... என ... வெளியே போகா
டிக்குத் து. ... தாண்டியை அடுப்பின்மேலேவை
ு மண்வாலேன்னகிற எந்திரத்தில் தண்ணீரை ஊற்றிக்கொண்டி
ுக்க, அந்த எந்திரத்தின் குழாவின்கீழ் ஒரு பாத்திரத்தைவைத்து
ந்தப்பானேயின்கீழ் பெரியசுவாலேபோடுக. அந்த எந்திரத்தில் த
ண்ணீரை மேலுக்குமேல் வார்த்துக்கொண்டிருக்க. முதலில் இறக்
ய திராவகம் காரமில்லாமலிருக்கும். அதை எடுத்து வேறே வை
த்துக்கொண்டு, பிறகு இறங்குகிற திராவகம் காரமாயும் மஞ்சள்நிற
மாயும் இருக்கும் அதை எடுத்து ஒரு சீசாவில்வார்த்து வைத்துக்
கொள்க. இந்த திராவகம் இரும்பை உருக்கும். திராவகம் இறங்கு
கிறது நின்ற உடனே அந்தபானேயை எடுத்துவிடுக. இவ்விதமாய்
இரண்டுவிசை திராவகத்தை இறக்கிக்கொள்க. இரண்டுவிசையும் இ
றங்கின காரமுள்ள திராவகத்தைச்சேர்த்துக் காளகண்டசெந்தூரத்
திற்குப்போடுக. காரமில்லாத திராவகங்களைச்சேர்த்துக் குன்மரோ
கத்துக்குச் சங்கதிராவகத்திற்காக உபயோகிக்கலாம்.

ஐ.க. பி. காளகண்டம்செய்யும்விதம்.

89. பூமியில் ரு-வரட்டியைவைத்து அதில் நெருப்பைமூட்டி,
வரட்டிகள் பற்றிக்கொண்டஉடனே பானே ஓட்டை ஒரு ஐாண்

72. வெள்ளிபஸ்பம், உடும்பின்நகம், நத்தையின்மேலோடு, யானைத்தந்தம், கோழிநெஞ்செலும்பு, துரிசு, யெல்லாம்சேர்த்து எலுமிச்சம்பழ ரசத்தைவிட்டு கஉ-ஜாமம் அரைத்து மாத்திரைசெய்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிற்போட்டால் கண்ணிற் பூ விழுந்திருந்தால் சொஸ்தமாகும்.

ஐ. க. பி. பூநாகஜ்யநீர் சாக்குகட்டு.

73. துரிசு, இந்துப்பு, சூடம், சீனம், கல்லுப்பு, பூநீர், நவாச்சாரம் வகைக்கு பூ-க, நர்லாங்காய்ச்சு வெடியுப்பு பூ-ச, புளியிலை பூ-அ, எல்லாம் கல்உரலில் இடித்துஒருசட்டியிற் போட்டு அடுப்பில்வைத்து உ-ஜாமம் எரித்தால் சுண்ணும்பு உண்டாகும். அந்தசுண்ணும்பை எடுத்துவைத்துக்கொண்டு, அந்தசுண்ணும்பு நிறையின் நாலில் ஒருபாகம் பூநாகம் சுண்ணாம்பில்சேர்த்து வைத்தால் அதில் ஐயநீர் உண்டாகும். அப்படியானவுடனே நாயுருவிச்சாம்பலில் எடுத்த உப்பு, கள்ளிப்பாழுப்பில் எடுத்தஉப்பு, இவ்விரண்டுவித உப்பையும் ஒவ்வொன்றும கால்சேராக பூநாகத்தோடு சேர்த்து ந-நாள் வைத்திருந்தால் ஐயநீராகும். அந்த ஐயநீரால் எந்தசாக்குக்கும் ஒருஜாமம்வரையில் சுருக்கு ஒத்தடம்கொடுத்தால் அந்தசரக்கு அக்கினிஜயமாகும். இவ்விதமாய் கட்டபட்டசாக்கு எந்தமருந்திலசேர்த்தாலும் அது அதிகருணத்தைக்கொடுக்கும்.

ஐ. க. பி. அஷ்டதன்மமுதலானதற்குத் தும்மட்டிக்காய்கடுகு.

74. பேய்த்தும்மட்டிக்காய்சாறு படி-உ, பொணடைச்சாறு படி-க, ஒருசட்டியில்சேர்த்து அடுப்பில்வைத்து, மெதுவான சுவாலைபோட்டுப் பாகுபக்குவமாகிறகாலத்தில், பஞ்சலவணமைந்தும்

ாத்து ஒருமண்டலம்
தடவினால் வங்கும் அதன் கருஞ்சிட்டைகளும் நீங்கும்.

ஐ. க. பி. அண்டவாதத்திற்கு மெழுகு.

76 கழற்சிவிதை, வெள்ளைக்குண்டுமணி, முடக்கத்தான், எருக்கம்விதை, காட்டுக்கொள்ளு, இவை சமபாகமாகச்சேர்த்து, கல்லுரலிற்போட்டு இடித்து, வேண்டிய ஆமணக்கின் எண்ணெயைவிட்டு அந்தசூரணத்தைக் கல்வத்திற்போட்டு நாலுஜாமம் அரைத்து மெழுகுபக்குவமாய் செய்துகொண்டு கொட்டைப்பாக்களவாக உண்டைகள்செய்து கொண்டு ௩-நாள் உட்கொண்டால் அண்டவாய்வு அண்டவீக்கம் சொஸ்தமாகும். உப்புதள்ளுபடி அண்டத்தில் வீக்கமிருந்தால் ஒட்டைலத்தி, கழற்சியிலை, இடித்துவறுத்து ஒத்தடம் கொடுத்தால் அனுகூலமாகும்.

ஐ. க. பி. எலிகடிக்குமருந்து.

77. ஆகாசகருடன்கிழங்கு ஒருவராகனிடையை வெள்ளாட்டுப்பாலில் மெலிதாக அரைத்து ௩-நாள் உள்ளுக்குக்கொடுத்தால் சொஸ்தமாகும். உப்புதள்ளுபடி.

ஐ. க. பி. புழுவெட்டுக்குமை.

78. பொரித்தவெண்காரம ஒருவராகனிடையை வெண்கலத்தட்டில்வைத்து அதின்மேரில் கையாந்தகரை ரசத்தைவிட்டு இருப்பு பாத்திரத்திஞல் ௩-நாழிகை அரைத்து பிறகு வெண்ணெய்சேர்த்து, சங்கிஞல ௩-நாழிகை அரைத்து ஒருடப்பியில் எடுத்துவைத்துக்கொண்டு, புழுகிஞல் மயிர் உதிர்ந்துபோனல் ரு-நாள் தடவிஞல் மயிர் மறுபடியும் முளைக்கும்.

...த்தில்

...வலி, உதரசசலகல, உட... ...டு ... ...பந்தத்தினால்
உண்டாகிற வியாதிகளெல்லாம் சொஸ்தமாகும்.

ஐ. க. பி. சொரிசிரங்குக்குமருந்து.

80. ஆம்பல்கிழங்கு, வெம்பாடம்பட்டை பூ-க, அவுரிச்சாறு படி-க, வேப்பங்கொழுந்து அரைத்த உருண்டை பூ-க, கார்போகரிசி பூ-உ, துத்தம், துரிசு வகைக்கு பூ-வ, வேப்பம்விதை அரைத்தஉருண்டை பூ-க, இவையெல்லாம் அரைத்து ௭-படி நல்லெண்ணெயிற்போட்டு வெயிலில் வைத்துக்கொண்டு அருணோதயத்துக்கு இந்த எண்ணெயைச் சிரங்குக்குத் தடவிக்கொண்டு-௩-மணிவரைக்கும் இருந்து பிறகு இலுப்பைக்கட்டியினாலாவது பச்சைப்பயறு அரைத்தாவது உடம்புக்குத்தடவிக்கொண்டு ஸ்நானஞ்செய்தால் அனுகூலமாகும்.

ஐ. க. பி. உன்மாதபித்தத்துக்கு நசியம்.

81. கால்சேர் நல்லெண்ணெயில் உடும்புப்பிச்சைபோட்டுக் காய்ச்சி நசியமாகச் செய்துகொண்டு பித்தம் உபரியாயிருக்கிற காலத்தில் இந்த நசியத்தை நாசியிற்பிழிந்தால் உபரியாயிருக்கிற பித்தம் இறங்கிப்போகும்.

ஐ. க. பி. பீனசத்துக்கு கல்பம்.

82. நெல்லிமுள்ளி, மிளகு, கடுக்காய், கஸ்தூரிமஞ்சள், வேப்பம்விதை வகைக்கு ஒரு பலமாகச்சேர்த்துக் கையாந்தகரைச்சா

ர்-க,
ற்சேர்த்
ஒருதரம் பேதிக்குவாங்கிப்பிரகு கo-நாள் கொஞ்சங்கொஞ்சமாய உ
ள்ளுக்குச்சாப்பிட்டால் ஊறல் சொஸ்தமாகும்.

ஐ. க. பி. ஆயுசு கிண்ணியைச்சோதிக்கிறவிதம்.

85. ஆண்டோடாகில்தெற்காகி ஆறும்மாதம் வடக்காகி, நீண்
டுகிழக்கே முத்திங்கள் நேர்மேற்கே திங்களொன்றரையாம், ஆண்
டாரறிந்து சொன்னபடி யறிவாலறிந்துபாருங்கள், மாண்டேபோ
ஞர் கண்டீரோமதியேற்குறைந்து தோன்றிடுமே. பதினறுபலம்
றையுள்ள தாமபிரகிண்ணியில் பசுவின்நெய் -கசு.

ஐ. க. பி. உன்மத்தம், வெறிபித்தம், சித்தபிரமம் அடிக்கடி
மூர்ச்சைவந்துவிழுகிறது, பித்த எரிதன்மம் மாரோரிச்சலுக்குமருந்து.

86. கோஷ்டம் ஐ-வராகனிடையைவெந்நீர் விட்டரைத்து உ
ருண்டையாகச்செய்து அந்தஉருண்டையை-உ வடையுள்ளதேனில்
கலந்து உட்கொள்க. மெலியசரீரத்துக்கும் சதாரண சரீரத்திற்கு
ம் அரை வராகனிடை கோஷ்டத்தைத் தண்ணீரில் அரைத்துக்
கொடுக்க. இச்சாபத்தியம். கo-நாள் உ-வேளையுட்கொண்டுவந்தால்
மேற்சொல்லியிருக்கிற வியாதிகள் தீரும். மருந்து அப்போதைக்கப
போது செய்துகொள்ளவேண்டியது. அடுத்தநாள் செய்திருந்த மரு
ந்து உதவாது.

ற்றில் ச-ஜாமம் அரைத்து, பத்துபில்லைகளாகத் தட்டி ெ
காயவைத்துக்கொண்டு, பசுவின்பாலில் ஒருபில்லையை அ
தலைக்குத்தடவிக்கொண்டு நன்றாய்தேய்த்துப் பிறகு வெ
ஸ்னானம்செய்துக. இவ்விதமாய் நாலுநாளைக்கு ஒருதடவை
செய்தால் பீனச உபத்திரவம் சொஸ்தமாய் கண்ணுக்கும
உண்டாகும்.

ஐ. க. பி. மூலிகை விஷ அறிவிப்பு.

83. தான்றிக்காயின்கொட்டைவிஷம், சித்திரமூலத்தின் மேற்
பட்டை மருந்துக்குஉபயோகம், உள்வேர் விஷம்; செவதைவேரின்
பட்டை மருந்துக்குஉபயோகம், உள்வேர் விஷம்; பாதிரிவேர்,
வில்வவேர், முன்னைவேர், சுக்கு, இஞ்சி, எள்ளு, முருங்கப்பட்டை,
இந்தசரக்குகளின்மேல் தோல்விஷம்.

ஐ. க. பி. ஊறலுக்கு சாமிநாத எண்ணெய்.

84. சிற்றாமணக்கெண்ணெய் சேர் -௧, எலுமிச்சம்பழச்சாறு சே
பூந்திப்பட்டை பூ ௧, கழற்சிபருப்பு ௩, அரைத்து எண்ணெயி
ஙொ மெழுகுபக்குவமாய்க்காய்சிக்கொண்டு. இந்தஎண்ணெயில்

### ஐ. க. பி. மலட்டு வலிக்குக்கடுகு.

பொண்டை கொழுந்துபடி-உ, அரைத்துபொண்டைநடு டித்தசாறுபடி-உ-யோடுசேர்த்து மிளகு, சுக்கு, வசம்பு, வெ ங்கு, ஓமம், சீரகம், கருஞ்சீரகம், கடுகு, நாய்க்கடுகு வகை உ-வ, இந்துப்பு,ஆனைத்திப்பிலி வடை-உ, இடித்து ஷை ரசத்திற் பாட்டு அடுப்பில்வைத்து சுவாலைபோட்டு, கால்சேர் காணும்படி யானசமையத்தில் முதல்தடவை இறக்கினசாராயம் அரைபடியை விடுக. விட்டஉடனே சுவாலைஉண்டாகும், அதின்பேரில் ஒருசட்டி யைக்கவிழ்த்து அந்தச்சுவாலையை அணைத்து அருணோதயகாலத்தில் அந்த கியாழத்தில் சேர் ஶூ-கொடுத்து, அந்தக்கடுகும் கழற்சிக்காய் பிரமாணம் எடுத்துக்கொடுக்க. இவ்விதமாக-௩-தினம் அல்ல தினம்கொடுத்து நிறுத்துக. மிகுதியாயிருக்கிறகடுகை வெயிலில் கா யவைத்து எடுத்துக்கொண்டு, வேப்பங்கொழுந்து, இண்டங்கொழு ந்து, குமிழின்கொழுந்து வகைக்கு புளியங்கொட்டை பிரமாணம் அரைத்து ஷை கடுகில் கழற்சிக்காய் அளவு சேர்த்து உருண்டை யாகச்செய்து ருதுவாயிருக்கும்காலத்தில் காலையில் ஒரு உருண்டை கொடுக்க. இவ்விதமாய்-௩-நாள்கொடுத்தால் ருதுவாகிறகா

பாகமாகச் சர்க்கரைசேர்த்து உ-வடை அளவெடுத்து துருஞ்சிரசத்திலாவது, அல்லது நார்த்தம்பழத்தின் ரசத்திலாவது கலந்து நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை ஒருமண்டலம் உட்கொண்டால், அக்கினிமந்தம், ஆரோசிகம், உப்பிசம் முதலானரோகங்க ணீங்கும்.

ஐ. க. பி. அக்கினிமந்தத்துக்கு அஷ்டாதிசூரணம்.

38. சுக்கு, திப்பிலி, மிளகு, சீரகம், கருஞ்சீரகம், இந்துப்பு, ஓமம், வகைக்கு பூ-க, பெருங்காயம் பூ-வ, இடித்து வடிகட்டிச் சூரணத்துக்குச் சமபாகம் சர்க்கரையைச்சேர்த்து, வேளைக்கு உ-வடை வீதம் நாள் ஒன்றுக்கு உ-வேளை ஒருமண்டலம் உட்கொண்டால் அக்கினிமந்தம், சர்வாங்கவாதம் நீங்கும்.

ஐ. க. பி. சூசிகவாய்வு, கிராணி, குன்மம், பொருமலுக்கும் படாந்கரம், அரிதகிலேகியம்.

39. வெட்டத்திருப்பி, பெருமரப்பட்டை, கருவேப்பிலைத்தண்டு, முக்காவேளைவேர், வேலம்பட்டை, பொடசைப்பாலைப்பட்டை, வில்வவேர், மாதுளைவேர், சாரணைவேர், பெரண்டைதண்டு, வகைக்கு பூ-ரு, சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், மிளகு, ஓமம், குராசாணிஓமம், காட்டத்திப்பூ, கொடசப்பாலைவிதை, வாலுளுவையரிசி, ஏலம், கிராம்பு, லவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, சாதிக்காய், ஜாதிபத்திரி, பஞ்சலவணம், கோஷ்டம், அதிவிடயம், சீரகம், வில்வவோடு, மாதுளையோடு, விளாம்பிசின், இலவம்பிசின், காசுக்கட்டி, வகைக்கு பூ-உ, கடுக்காய்-கூo, இந்தக்கடுக்காய்களைப் புளித்தகாடியில் அறுபதுநாழிகை யூறப்போட்டு, பிறகு காயவைத்து அதன்விதைகளை நீக்கி, மேல்தோலையும் மற்றமருந்துகளையும் வெவ்வேறாக வறுத்து, வேர்களையும் பட்டைகளையும் வேறாக எடுத்திடித்து, ஒருபானையிற் போட்டு அதில் கூ-மரக்கால் தண்ணீர்விட்டுக்காய்ச்சி ஒருபடியாழுமாக்கி வறுத்துவைத்திருக்கிற மருந்துகளை இடித்து வடிகட்டிச்சூரணமாகச்செய்து அந்தக்கியாழத்தோடு க-படி எருமைத்தயிரையும் கூ-சேர் சர்க்கரையையுஞ்சேர்த்து வடிகட்டி, பாகுசெய்துகொண்
அந்தபாகத்தில் மேற்சொல்லியிருக்கிற சூரணத்தைக் கொஞ்சங்
ஞ்சமாகப் போட்டு வேண்டியபசுவின் நெய்யையும் ஒ-சேர் ந
ல்லெண்ணெயையும், அதில்விட்டுப் பக்குவமாய் லேகியம் செய்
ண்டு, வேளைக்கு கொட்டைப்பாக்களவாக நாள் க-க்கு உ-
ஒருமண்டலம் உட்கொண்டால் சூசிகவாய்வு, கிராணி, பெ
குன்மம், எரிச்சல், முதலானவியாதிசொஸ்தமாகும். பத்தி
ப்பு, புளிப்பு, தள்ளுபடி.

## ஐ. க. பி. சூசிகவாய்வுக்கு சௌபாக்கியசூண்டி.

40. சுக்கு பூ-கசு, திப்பிலி பூ-அ, மிளகு, கிரந்திதகரம்,வாய்விளங்கம், ஓமம், வகைக்கு பூ-ச, கொத்தமல்லி பூ-ரு, கோஷ்டம, காட்டெருமைப்பால், சீரகம், லவங்கப்பட்டை, நவாச்சாரம், சதிச்சாரம், வகைக்கு பூ-உ, வெள்ளைப்பூண்டு பூ-அ, எவச்சாரம் பூ-க௦, பொரித்த வெண்காரம் பூ-க, பஞ்சலவணம் ஐந்தும் பூ-ரு,கார்கொலி பூ-க, மேதை பூ-க,சர்க்கரை பூ-கசு, ஏலம் பூ-க, சர்க்கரை தவிரமற்றதினுசுகளையெல்லாம் வறுத்து, உப்புவிதங்களெல்லாம் கல்வத்திற்போட்டுப் பொடிசெய்து பாக்கி மருந்துவகைகளெல்லாம் இடித்துவடிகட்டி, உப்புப்பொடியையும் சர்க்கரையையும் அதோடுசேர்த்து அதில கஉ-படி, தேனைவிட்டரைத்து லேகியம் செய்துகொணடு, வேளைக்கு மூன்று வடை நாள் ஒன்றுக்கு இரண்டு வேளையாக ஒருமண்டலம்சாப்பிட்டால் சூசிகவாய்வு, ஜன்னி, கிராணி, சுரம், முதலானவியாதிகள் சொஸ்தமாகும்.

பத்தியம்.—கசப்பும், புளிப்பும் தள்ளுபடி.

## ஐ. க. பி. சகலவாய்வுக்கும், தீபனத்திற்கும், இங்காஷ்டகம்.

41. சுக்கு, திப்பிலி, மிளகு, கண்டதிப்பிலி, வெள்ளைப்பூண்டு, சீரகம், வகைக்கு பூ-க, பெருங்காயம், இந்துப்பு, கந்தகம், வகைக்கு பூ-வு, கலவத்திற்போட்டு எலுமிச்சம்பழச்சாறுவிட்டு நாலுசாமம் அரைத்து ஒரு வடை இடையுள்ளதாக மாத்திரைகள்செய்து வெய்யிலில் காயவைத்து எடுத்துக்கொண்டு, வேளைக்கு ஒருமாத்திரை விதம் இரண்டுவேளை சாப்பிட்டுக்கொண்டுவந்தால் அக்கினிமந்தம், வயிற்றுவாய்வு, சொஸ்தமாகும். பசியுண்டாகும்.

## ஐ. க. பி. தீபனத்திற்கு பஸ்பம்.

42. சிறுகாரம் வடை-ச; கர்ப்பூரசிலாசத்து வடை-கசு, பொட்டிலுப்பு, வெண்காரம், இந்துப்பு, வகைக்கு வடை-ச, கல்வத்திற்போட்டு, நப்பாமெனிரசம்சேர்த்து நாலுஜாமம் அரைத்துப்பில்லைசெய்து, ரயனைத்துப் புடம்போடவேண்டியது. அதனால் பஸ்பமாகிவிடும். அப்பொடிசெய்து ஒருடப்பியில் வைத்து வேளைக்கு உ-பணவிவிதம் தேனிற்கலந்து உட்கொண்டால் தீபனம் உண்டாகும்.

## ஐ. க. பி. அக்கினிமந்தத்திற்குச்சுயஅக்கினி.

43. ரசம் பூ-ச,மனோசிலை பூ-உ, கந்தகம் பூ-சு,காந்தம் பூ-... உப்பு அப்பொடி பூ-கஉ, கல்வத்திற்போட்டுக் கற்றாழை சேர்த்து, கஉ—ஜாமம அரைத்து, ரொட்டியைப்போல் தங்கலக்கிண்ணியிற்போட்டு வெய்யிலில் வைத்தால் அக்கி

னி உண்டாகும். பிறகு பொடிசெய்து டப்பியில்வைத்துக்கொண்டு, வேளைக்கு ஒரு பணவிடைபிரகாரம் உட்கொண்டால் அக்கினிமாந்தாதி வாய்வு அனுகூலமாகும்.

### ஐ. க. பி. அக்கினிமாந்தத்திற்குச்சுயஅக்கினி.

44. காந்தம், இரும்புஅரப்பொடி, சிட்டம், சங்கு, கடல்நுரை, நவாச்சாரம், வெண்காரம், கல்நார், கந்தகம், இனுசுக்கு பூ-உ, கற்றாழைச்சோறுபோட்டு கஉ-ஜாமம் அரைத்தபிறகு சுயம அக்கினி உண்டாகின்றது. வேளைக்கு பணவிடை அளவாக இரண்டுவேளை உட்கொண்டால் அக்கினிமாந்தாதி வாய்வுரோகம் அனுகூலமாகும்.

### ஐ. க. பி. சகலமேகம் பித்தவெட்டை ரத்தக்ஷயம் இவைகளுக்கு வில்வாதி குழம்பு.

45. வில்வஇலை தூக்கு-ச, இடித்துப்புட்டவித்துப் பிசைந்தெடுத்துக்கொண்டு சர்க்கரை சேர்-ச, அந்தரசத்திற்போட்டு வடிகட்டிப்பாகம்செய்து, அந்தப்பாகத்தில் வெண்டாமரைக்கொட்டைப் பருப்பு பூ-ச, சீரகம் திப்பிலி நெற்பொரி வகைக்கு பூ-உ, கொத்தமல்லி, கூகைநீர், தாளிசப்பத்திரி, லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை வகைக்கு பூ-க, இவையெல்லாம் இடித்து வடிகட்டிச் சூரணஞ்செய்து, அந்தச்சூரணத்தையும் வேண்டியபசுவின் நெய்யையும் தேனையும் சேர்த்துக் குழம்பு பக்குவமாயாகும்போது கீழே இறக்கி வைத்துக்கொண்டு, வேளைக்கு களஞ்சிபிரமாணம் இரண்டுவேளை ஒருமண்டலம் சாப்பிட்டால் ரத்தக்ஷயம், பித்தவெட்டை, கைகால் எரிவு, அஸ்திசுரம், அங்கதாகம், பித்தவெப்பம், அன்னத்துவேஷம், அரோசிகம், வாய்புகைச்சல், ரத்தப்பிரமேகம், வாய்நீர் விழுதல், சகலமேகம், அனேகவியாதிகளும் சொஸ்தமாகும். இச்சாபத்தியம்.

### ஐ. க. பி. தீபனம் இல்லாதவர்களுக்கு மகா வில்வாதிலேகியம்.

46. வில்வவேர் பூ-ருo, விலாமிச்சைவேர், தூதுவளை, நன்னாரிவேர், முன்னைவேர், பெருவாகைவேர், கண்டங்கத்திரிவேர், குமிழம்வேர், செங்கம்வேர், வேலின்வேர், பாதிரிவேர், நெருஞ்சில்வேர், நார்த்தம்வேர், முசுமுசுக்கைவேர், சிற்றாமுட்டிவேர், தேற்றான்வேர், பேராமுட்டிவேர், வகைக்கு பூ-கo, இடித்து ஒருபெரியபானையிற்போட்டு அ-மரக்கால், தண்ணீரைவார்த்து அஷ்டபாகம் காய்ச்சிக்கியாழமெடுத்துக்கொண்டு, தூரிஞ்சிரசம், எலுமிச்சம்பழரசம், நார்த்தம்பழரசம், இஞ்சிரசம் வகைக்குப்படி - ш, சர்க்கரை பூ-ருo, சேர்த்துப் பாகுசெய்து, கோஷ்டம், சுக்கு, திப்பிலி, மிளகு, கொத்தமல்லி, ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், அதிமதுரம், கொழுந்திரிப்பழம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, ஜாதிபத்

திரி, சிறுநாகப்பூ, தாளிசப்பத்திரி, சண்பகப்பூ, ஜடாமாஞ்சி, மரம ஞ்சள், தேவதாரம், பேரீச்சம்பழம், விளாம்பழம், திப்பிலிமூலம், செவ்வியம், சீரகம், இலுப்பைப்பூ, வெட்பாலைப்பட்டை, வெட்பாலை யின்சூரணம், வகைக்கு பூ-உ, பழம் வகையாக்களைத்தவிர மீதிசர க்குகளை இடித்து வடிகட்டிச் சூரணமாகச்செய்து, பழங்களையெ ல்லாம் பிசைந்து இந்த சூரணத்தோடுசேர்த்து மேற்சொல்லியிருக் கிற பாகத்திலேபோட்டு லேகியபக்குவமாயாவதற்கு வேண்டியபசு வின் நெய்யும் தேனும்விட்டு லேகியம்செய்துகொண்டு, வேளைக்குக் கொட்டைப்பாக்களவாக இரண்டுவேளை ஒருமண்டலம் உட்கொண் டால் வாதபித்தம், கபம், பிண்டசூலை, சரீரத்தின்சூடு, அஸ்திசுரம், விக்கல், பிரமேகம், பாண்டுரோகம், சத்தி, வயிற்றுவலி, சுவாசகாசம், ஆரோசிகம், இன்னும் அனேகசில்லரை வியாதிகளெலலாம் சொஸ் தமாகும். இச்சாபத்தியம்.

ஐ. க. பி. எரிவு மயக்கம் பித்தத்துக்கு வில்வாதிலேகியம்.

47. வில்வவேர் பூ-௲, சிற்றாமுட்டிவேர் பூ-௲, கரிவேப் பிலையீர்க்கு பூ-க0, முக்காவேளைவேர் பூ-க0, இந்தநாலுவகைகளை யும் இடித்து ஒருபானையில்போட்டு அ, மரக்கால்ஜலத்தை வார்த்து க்காய்ச்சிஅஷ்டபாககியாழமிறக்கிக்கொண்டு,பழயவெல்லம்பூ-௲, போட்டுப் பாகுசெய்து திப்பிலி, திப்பிலிமூலம், வகைக்கு பூ-உ, சித்திரமூலம், சுக்கு, ஏலம், சீரகம், கிராம்பு, இந்துப்பு, மிளகு, லவ ங்கப்பட்டை, சிறுநாகப்பூ, தாளிசப்பத்திரி வகைக்கு பூ-க, தக் கோலம், லவங்கப்பத்திரி, வகைக்கு பூ-உ, பொன்னிறமாய் வறுத துக்கொண்டு இடித்துவடிகட்டி, சூரணஞ்செய்துகொண்டு, ஷை பாகத்திற்போட்டு ௨-படி தேனையும்விட்டுப் பக்குவமாய் இறக்கிக் கொண்டு, வேளைக்கு கொட்டைப்பாக்கு பிரமாணமாக இரண்டு வேளை ஒருமண்டலம் சாப்பிட்டால் வாயில் நீர்ஊறுதல் கை கால் எரிவு, மயக்கம், ஈரல்எரிவு, சங்கடம், அக்கினிமந்தம், அன்னத்வே ஷம், வாந்தி, இவைகளெல்லாம் சொஸ்தமாகும். பசுவின்பால், நெ ய், தயிர், மோர் இவைகளைச் சேர்த்துக்கொள்ளலாம், புளிப்பும், க சப்பும், தள்ளுபடி.

ஊஷ்ணவாய்வு பித்தவாய்வுக்குச்சாபங்க வில்வாதிலேகியம்,

48. வில்வவேர், முக்காவேளைவேர் வகைக்கு பூ-௲, சங்கம் வேர் பூ-கூ, அமுக்கிறாவேர், அகில்பட்டை, மூக்கரட்டைவேர், அத்திமுள்ளிவேர், தூதுவளைவேர், முசுமுசுக்கைவேர், பெருங்கா ஞ்சிவேர், முடக்கத்தான், சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர், வகைக்கு பூ-எ, இடித்து கசு-மரக்கால்தண்ணீரைவிட்டு அஷ்ட

கமாக கியாழம் செய்துகொண்டு, சo-பூ வெல்லம்போட்டு, இஞ்சி, தை, சாறு படி-க, நார்த்தம்பழம்சாறு படி-ஏ, சேர்த்து பாகு பக்குவமாய் செய்து பக்குவகாலத்தில் ஏலம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி, கொத்தமல்லி, போரத்தை, கர்க்கடகசி ங்கி, லவங்கம், சுக்கு, மிளகு, திப்பிலி, திப்பிலிமூலம், சீரகம், கரு ஞ்சீரகம், கொடிவேலி, அதிமதுரம், கடுக்காய், தான்றிக்காய், நெல் லிமுள்ளி, வகைக்கு பூ-க, இடித்துச்செய்த இந்த சூரணத்தையும், தேன்படி இரண்டையும் போட்டு லேகியம் செய்துகொண்டு, வே ளைக்குக்கொட்டைப்பாக்கு பரிமாணமாக இரண்டுவேளை ஒரு மண் டலம் சாப்பிட்டால் ஊஷ்ணவாய்வு, பித்தவாய்வு, சொஸ்தமாகும்.

ஐ. க. பி. இடுப்புவலிக்கும், வீரியம்விர்த்தியாகிறதற்கும் லேகியம்.

49. புரசன்பிசினி வ௳ கஏ, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு வகைக்கு வ௳-ஏ, நிலைக்கடம்பு வ௳-க, நீர்முள்ளிவிதை பூ-உ, எ ள்ளு பூ-க, பச்சைக்கடலைமாவு பூ-க, ஒருதேங்காயில் நிரப்பி அ தன்வாயைமூடி அந்தத்தேங்காயைத்துப் புடம்போற்கடை தளமு ள்ளதாக சாணியைப்பூசிக் காயவைத்து மேல்ஓட்டைத் தேங்காய் வெடித்த உடனே வெளியீருந்தை எடுத்துக்கொண்டு அதோடு வ-பூ ட்டு உள்ளே நெய்யும் சேர்த்து லேகியஞ்செய்துகொண்டு, வேளைக்கு சு ண்டக்காய் பிரமாணமாக உ-வேளை உட்கொண்டுவந்தால் இடுப்பு வலி தீர்ந்து, விரியவிர்த்தியாகும். இந்தமருந்தைச் சபதம்போட்டு க்கொண்டு கொடுத்துப்பார்க்கலாம்.

ஐ. க. பி. தாதுவிர்த்திக்கு மன்மதசிந்தாமணிலேகியம்.

50. சாம்பிராணி, சன்னலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ வகை க்கு பூ-உ, கஞ்சா சேர்-ஏ, நெய் சேர்-ஏ, நிலாவிரை பூ-க, பெல் லம் சேர்-ஏ; கஞ்சாவில் நெய்யையும், சலத்தையும்விட்டு வேகவை த்து, அந்தநெய்யை இறக்கிக்கொண்டு, மீதியான சாமான்களை இடி த்து வடிகட்டி, சூரணஞ்செய்துகொண்டு இந்தசூரணத்தை மேற்ப டி கஞ்சாவிலிருந்திறக்கிய நெய்யோடு சேர்த்து லேகியஞ்செய்து கொண்டு; வேளைக்கு சுண்டக்காய் பிரமாணமாக உ-வேளை சாப் பிட்டுவந்தால் வீரியவிர்த்தியாகும்.

ஐ. க. பி. வீரியவிர்த்திக்குலேகியம்.

51. அதிமதுரம், நெருஞ்சில்விதை, பூனைக்காலிவிதை, நிலைப் பனைக்கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு, முள்ளிலவம்பிசின், சர்க் கரை, தேன், சமபாகமாகச் சேர்த்து லேகியம்செய்துகொண்டு நாள் ஒன்றுக்கு உ-வேளை உட்கொண்டுவந்தால்வீரியவிர்த்தியாகும்.

